# ஸ்ரீ ரமண கீதை

யாத்தவர்
ஸ்ரீ வாஸிஷ்ட கணபதி முனிவர்

(மொழிபெயர்ப்பு)








நூற்றுண்டு விழா பதிப்பு

பதிப்பாளர் :
டி. என். வேங்கடராமன்,
தலைவர்,
நிர்வாகக் குழு,
ஸ்ரீ ரமணாச்ரமம்,
திருவண்ணாமலை.

1980

# விஷய அடக்கம்

# முன்னுரை

இந்நூல் இன்றுந் திருவண்ணுமலையி லிலகும் பெரி யாராம் பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷிகளின் உபதேசவடி வாம். தாமே நூலை ஆய்ந்து விவேகிகள் இதன் விஷயங் களைக் கிரகிப்பரென்று இம் முன்னுரையில் அவற்றைப் பற்றி யாதுஞ் சொல்லவில்லை. பெரிதாம் யோக சாஸ்தி ரத்தின் சூத்திரம் போன்ற இந்நூலை மீண்டு மெவனே சுருக்கிக் கூறுவான்? மந்த்ரயோக ராஜயோக ஞான யோக பக்தியோகங்களின் ரகசியங்கள் திறனுற இதனில் விளக்கப்பட்டுள வென்று இம்மட்டுமே சொல்லலாம்.

இதனை யுபதேசித்த பெரியாரின் பெயர்பற்றி இந் நூல் ரமணகீதையென வழங்குறும்.

பகவத்கீதையில் பகவான் வாசுதேவன் உபதேசகனும் கிருஷ்ணத்வைபாயனன் பின்பற்றி நூல் யாத்தவனுமா யினவாறு, இங்கே பகவான் ரமண மஹர்ஷி உபதேச கரும் வாஸிஷ்ட கணபதி முனிவர் பின்பற்றி நூல்யாத்த வருமாவர். (விஷயங்களை) வினவுவார் பலர்; நூலாசிரி யரும் அவர்களு ளொருவர் என்பது இங்குள சிறப்பாம்.

இவ்வினுவிடைத்தொடர் ஒரே நாளில் நடைபெற வில்லை யென்பது நூலாசிரியர் கொடுத்துள சம்பாஷண தினக் குறிப்பினின்று தெளிவாதலால் இங்கதுபற்றிக் கூறுதல் மிகையாம்.

கேட்போர் வினவியபோதும் பெரியார் விடையளித்த போதும் தாமா யுபதேசித்தபோதும் நூலாசிரியர் உட

னிருந்து அவ்வப்பொழுதே அப்பகுதிகளை சுலோகமாக்கி யிருக்கிறா ரென்பது தெளிவாய்த் தெரிகிறது.

தமது வினுக்கள் இவையெனத் துலக்க நூலாசிரியர் தெளிவாய்த் தன்மையைக் கையாண்டிருக்கிறார். இரண்டாம் அத்யாயத்தின் இரண்டாம் சுலோகம் மஹர்ஷி தாமே யருளியது. அவ்வதிகாரத்தில் மற்றுமுள சுலோகங்களால் நூலாசிரியர் அச் சுலோகத்தின் பொருளைப் பிரித்துக் காட்டியுளார். ஐந்தாவது ஆருவது அத்யாயங்கள் மஹர்ஷி தாமே யுபதேசித்தன. பிறவத்யாயங்களிற் கேள்விக்கேற்ப விடைகளுள.

இனி (இந் நூலின்) உபதேசகரையும் ஆசிரியரையும் பற்றித் தெரிந்தமட்டுஞ் சிறிதியம்பி நிற்பாம். உபதேசகராம் பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி பிரமாதிஸு மார்கழி மாதம் புனர்வசு நக்ஷத்திரத்திற் புவியிற் ரேன்றினர். துன்முகிஸு ஆவணிமீ இறைவனருளாலேயே தமதுண்மையை யுணர்ந்து வீடுவிட்டுத் திருவருணை சார்ந்து ஸஹஜான்ம நிலை பெற்றவர். பாண்டி நன்னுட்டு நடுவாந் திருச்சுழியலில் வதிந்திருந்த சுந்தரமய்ய ரெனும் பராசரகுலத் தந்தணேத்தமனுக்கு அழகன்னையிடம் உதித்துப் பிரஹ்ம சர்யத்தினின்றே பரமஹம்ஸ ராஞர். ஐம்பத்தைந்து வருஷங்கள் தமது திருவருணை ஆச்சிரமங்களிலமர்ந்து தமது மோனுனுபவத்திலிருந்தே உபதேசித்து ஆன்ம போதத்தை யளித்து, சென்ற விக்ருதிஸு சித்திரைமீ ௨ ௳ க்ருஷ்ண பக்ஷ த்ரயோதசி திதியன்று விதேஹ கைவல்ய மடைந்தது உலகமறிந்ததே.

மஹர்ஷியாம் இவர் நூலாய்வு, அனுமானமெனும் பிரமாணங்களின் பலத்தைக் கொண்டு போதித்தவரல்லர்.

உள்ளாழ்ந்த நோக்கில் நேரே தாம் கண்டனுபவித்ததையே உபதேசிக்கும் இவர் மும்மதத்தினர் பலராலும் குருவாகப் போற்றப்படுகிருர்.

நித்ய ஸஹஜாத்ம நிஷ்டையிற் சிறக்கும் நமது மஹர்ஷியை அறிவுமிகுஞ் சீடர் பலர் குஹேசகலை யுற்றவராய்க் கருதுவர். அன்னரது சீடருட் சிறந்த இந் நூலாசிரியருந் தமது குருவை அவ்வாறே துதித்துள்ளார். விஞ்ஞான வுணர்வொன்றிற்கே புலனுகும் இவ்விஷயத்தை நிருபித்தல் எம்மால் இயலாது. எமக்கும் இதனில் நம்பிக்கை யுண்டென்னும் இம்மட்டுமே யியம்பலாம்.

நூலாசிரியராம் கணபதி முனிவர் விசாகப்பட்டணப் பிரதேசத்திற் கலவராயென்னுங்கிராமத்தினராம் வாசிஷ்ட நரஸிம்ஹ சாஸ்த்ரியின் புதல்வராக பஹுதான்யஞு கார்த்திகைமீ மக நக்ஷத்திரத்திற் பிறந்து, பிலவங்கஞு மகரிஷியின் சீடரானுர். தவமிகுமிம்மகான் சென்ற தாது சிராவண சுத்த ஸப்தமியன்று புகழுடம் பெய்தினர்.

. இந்நூலை உள்ளபடி யாராய்பவர் மறுவிலா யோக வழி யுணர்தல் மிகத் திண்ணம். இதன் வெளியீடு ஞானத்தை நாடுவோர்க்கும் சாதகர்களுக்கும் பேருபகாரமாமென்பது ஒருதலை.

இங்ஙனம்

**நல்லாரடிப்பேணுவோன்.**

# உவப்புரை

**உள்ளதில்லதுணர்வோர்காள்,**

ஸ்ரீரமண பகவானை உள்ளத் திருத்தி ரமண கீதை யெனும் அருணூலை யாராயக் கருதினேனேயன்றி, அதைக் கற்றுணர்ந்து மகிழுங்கால் எதனையும் எழுத முடியா தென்றே சொல்லவேண்டும். ஆனந்தமே பிரஹ்மமென் னும் மறைமொழி தெளிவாகிறது. இதை யாராய்தல் எங்ஙனம்? விரிந்துயர் கருத்திசைந்த ரமண கீதையை யானாராய்வேன் என்பதினும் விந்தை யொன்றில்லை. பொருளுஞ் சுவையும் பதந்தொறுஞ் செறிந்துள. இதன்மாண் பொருள் ஸ்ரீ ரமண பகவானால் அருளப்பெற்றது; கண பதி முனிவரால் நூலுருவாக்கப்பெற்றது. இதனுளே மறை பொருள் பல வடங்கியுள.

இனி வேண்டுவது யாது? அவ்விருவர் யாவர்? யாவ ரோ! இதையுணரும் விருப்பமுளோர் வேறிடத்தே கேட் டுத் தெளிக. என்னை வினவக் கருதுவோர்க்கு இது சொல் வேன். அவ்விருவர் நரநாராயணரே யாவர். சீரிய ஞான மின்மை யென்னுங் காட்டுத்தீயாற் பொசுங்கிய பாரத சமுதாயமாம் மரக் கூட்டத்திற்குத் திவ்ய ஞானவமுது பொழியும் மேகத்தின் தலைமைத் தேவரே அவ்விருவர்.

### நூலின் இன்றியமையாமை

பகவத்கீதை யிருக்கும்போது ரமணகீதை எதற்கு? பகவத்கீதானுவாதம் (வழிநூல்) எனாது ரமணகீதை எனப்பட்டதா? பேர்வேற்றுமையன்றிப் பொருள் புதிது

ஏதாகிலும் இதனுளே யுளதா? இவ் வையங்களைக் களைந்து நூலின் இன்றியமையாமையை யுணர்த்தல் வேண்டும்.

பகவானது அருள்வாக்கென்று அன்பருக் குரைப்பேன். விசாரசீலர்க்குப் பின்வருமா றியம்புவேன். வேத வேதாந்தங்கள் பலவாறு பொருள் விரிக்கப்பெற்று, விடுதலையை நாடுவோரின் சந்தேகங்களை யகற்றுந் திறனற்று, நம்புதற் கிடமளியாதனவாய், விசாரசீலர்க்கும் உண்மையை விழைவோர்க்கும் பெருந்தடையோடுள. பிறமதக் கோட்பாடுகளைப் பின்பற்று மவா மிகுந்துளது. இதைத் தீர்ப்ப தெவ்வாறு? ஞானகாண்டமே இப்படித் தானென்று சலிப்புற்று வாளா விருப்பதா? அல்லது, அதைப் பற்றுவதா? திட ஞானி யாது செய்வான்? பாசமுற்றோனது கடமை யாது? இல்லறத்தோர் எவ்வாறொழுக வேண்டும்? இவை முதலாம் சந்தேகங்களுக்கு நேராம் விடைதருவோர் உளரோ வெனின், அத்தகையோர் இல்லாது போகவில்லை; அவரே இவர்.

"ஸத்யாஸத்யவிவேகம் அவாவறுக்கும் உபாயம்", "பந்த மனைத்தையும் விடுவிப்பது ஆத்ம நிஷ்டை யொன்றே" எனத்தொடங்கி ஸித்தர் பெருமைப் புகழுடன் முடிகிறதென்று ரமண கீதையில் லிங்கக் கருத்தை யுணரவொணாது. வினா விடைகளை ஒவ்வொன்றாய் ஆய்ந்துணர வேண்டும். இதனால் இது ஐயம் பலவகற்றுந் திறத்ததெனக் கூறு து கூறுகின்றது. வனத்துறைவோர்க்கும், இல்லறத்தோர்க்கும், பிரஹ்மவாதிகளுக்கும், துறவறத்தோர்க்கும், ஸாங்கியர்க்கும், ஆளுவோர்க்கும் ஆளப்படுவோர்க்கும், ஏனையோர்க்கு மெல்லோர்க்கும் எல்லாவாற்றானும் உய்யுநெறி யுணர்த்தி, அவரவர் கருத்திற் கேற்பப்

பரமபதத்தை யறிவித்து, அருணெறி விளக்கிச் செயற் கரிதாற்றுந் திறனுறு நூலும் உளதோ? பிரஹ்ம சூத்திரம் உளது; இல்லாதென்ன! ஆனாலும் அது அறிஞர் பலரின் பல கருத்து வேற்றுமையும், சந்தேகமும், நிரம்பியது; கதி யாது? ரமணகீதையே. ஆதலாற்றான் முற்கூறிய வியல்யாவும் பெற்றுள இந்நூல் வெளிப்போந்தது. இது பகவானருள் வாக்காஞ் சிறப்புறும்.

## விசேடங்கள்

இங்கே சிடர் பல நிலையினர். வினுக்கள் கொள்கை பலவுற்றன. அவ்வம்மத வுயர்நெறி யுணர்த்தும் உபதேசங்களும் விடைகளும் பற்பல பொருண்முடி வறைவன எனவும் வேண்டுமா? இது துவிதமா, அத்துவிதமா? ஏதோவோர் உண்மை நெறியாம். இத்தகைய பொருள் பலவற்றைக் கொண்டுள்ளது இந்நூலின் சிறப்பாம்.

## நூற்புகழ்

பிரஹ்ம சூத்திரங்கட்கும், தம்மபதத்திற்கும், உபநிடதங்கட்கும், கீதைகட்கும், (பைபிள், குரான் முதலாம்) பிறமத நூல்கட்கும் பொதுச்சுவை பெறு பொருள் விளக்கம் வேண்டுவோர் ரமணகீதையை யோதுக. நீலகண்டர், சங்கரர், ராமானுஜர், மத்வர் முதலாம் பாஷ்யகாரரது உள்ளக்கிடக்கையை யுணரு மார்வத்தோர் ரமணகீதையைக் கற்றுணர்க. சங்கரர் ஜகத்தை அஸத்ய மெனவில்லை யென்று யுக்தியுள வாதம் பல உதித்துளவன்றே? முடிவாங்கருத்தையுணர எத்தனையோபேர் தேடிச் சந்தேகமுற்றனர். "ஞானி உலகைப் பொய்யெனக் கருதான்; தன்னினும் வேறெனவுங்கருதான்." "நிலையுற்றுக் கடமை கடந்தார்க்கு நியமங்கள் தாமே நழுவும்." "வழிபாடின்றி

நிலே கூடாதென்பது துணிவு.'' "ஆரம்பாதிகாரிகளுக்கு இப்பணிகள் யாவும் மேலும் அகத்தூய்மையை நல்கும்'' முதலாம் மஹாவாக்கியங்களை ஆயுங்கால், விசேஷசம் சயங்களை நீக்கவல்ல நூல் இதுதானென்போம்.

ஐந்தாமத்யாயத்துள்ள இதயவித்தை, பத்தாமதிலுள்ள ஸங்கவித்தை, எட்டாமதிலுள்ள ஆச்ரமதர்ம விளக்கம், ''படிப்படியாய்ப் பரமனை யுறுதற்கே ஆச்ரம வொழுங்கு; பரிபாக மிக்கோர்க்கு வரிசைக்கிரமந் தேவையில்லை'' முதலாம் வசனங்களின் ஆழ்ந்த கருத்தை அங்கீகரித்தே தீரவேண்டும். பொருணிறை பராபர வித்தைகட் குறைவிடமாய், பன்னூற் கடலாய், நல்லோர் நாடற் குரித்தா யொளிரும் ரமணகீதையை ஆராயப்புகின் அது முதனூலினும் மிஞ்சுமென் றஞ்சி ஈண்டு நிற்பாம்.

இங்ஙனம்,

**உண்மை யுவப்போன்**



## ஸ்ரீரமணஸ்துதி

எலையிலா சச்சித் தின்பக் கடலெவ
னலையதே யாகு மகில வுலகமும்
நிலையனுய்க் குகையாழ் நிலையன் ரமணனு
முலைநினை விலனை யுளத்தி லுன்னுவாம்,



## நூற்பெருமை

பதந்தொறும் பொல்லாவினை யொழிக்குந் தூய்மை மிகு கீதையாம் இக்கங்கை, ஸ்ரீரமண முனிவரெனும் உயர்மலையரசினின் றுதித்துக் கணபதிகவியின் வாக்குருவ வழியொழுகி அன்பருளக்கடல் சேர்வதாம்.

# ஸ்ரீ ரமண கீதை



## முதல் அத்யாயம்

### உபாஸன ப்ராதான்ய நிருபணம்

1. மனிதவுருப்பெரு முருகனும் ஸ்ரீ ரமண மஹர் ஷியை வணங்கி, அன்னார் கருத்தைத் தெள்ளிய நூலாய்த் தொகுப்பாம்.

2. ஈசபுத்ர சகத்தின் 1913-ஆம் ஆண்டில் குளிர்ந்த தாம் இறுதி மாதத்து இருபத்தொன்பதாம் தினத்தன்று,

3. சீடர் யாவரும் அடங்கி யமர்ந்திருக்க, நிச்சயந் தெளியக் கருதிய யான் பகவான் மஹர்ஷியைப் பின்வரு மாறு வினவினேன்.

**வினா- 1 :—**

4. ஸத்யாஸத்ய விவேகத்தாலேயே விடுதலை எய் துமா ? இன்றேல், விடுதலை வழி வேறே யுளதா ?

**வினா- 2 :—**

5. ஞான நாடுவோர் விடுதலைபெற நூலாராய்ச்சி போதியதா ? அல்லது, குருமொழிப்படி வழிபடல் (உபா சனை) வேண்டுமா ?

**வினா- 3 :—**

6. ஞானநிறை வுணர்ந்தோ, அல்லது செயலோய் வினாலோ, நிலைத்த ஞானி அத்தகையனாகத் தன்னைத் தெளிதல் கூடுமா ?

**வினா - 4 :—**

7. ஞானியை எக்குறியாற் பிறர் அறிதலியலும்?

**வினா - 5 :—**

சமாதி (சித்த வொருமை) யினால் ஞானமே யன்றிக் கோருதலுங் கைகூடுமா?

**வினா - 6 :—**

8. கோரிக்கை கருதித் தவ மாற்றும்போது திட ஞான முறின் அக்கோருதல் கைகூடுமா, கூடாதா?

9. இவ்வாறு வினாக்களைச் செவியுற்று, ஐயந்தீர்க்கும் எனது குரு, அருணிறைவாம் பகவான் ரமண மஹர்ஷி பின்வருமாறருளினர்.

**விடை - 1 :—**

10. பந்த மனைத்தையும் விடுவிப்பது ஆத்ம நிஷ்டை யொன்றே. ஸத்யாஸத்ய விவேகமோ அவாவறுக்கும் உபாயமாம்.

11. ஞானி எக்காலும் ஆத்மாவிலேயே ஆழ்ந்து நிலைத்திருப்பன் ; உலகைப் பொய்யெனக் கருதான் ; தன்னினும் வேறெனவுங் கருதான்.

**விடை - 2 :—**

12. ஞானத்தை நாடுவோனுக்கு நூலாய்வினாலேயே காரியம் நிறைவேறிவிடாது. வழிபாடின்றி நிலை கூடாதென்பது துணிபு.

13. இயல்பாம் ஆத்ம நிலை (ஸஹஜஸ்திதி)யே சாதனை புரியுங்காலத்தில் வழிபாடென்றும், திடநிலை கூடிய நிலையில் ஞானமென்றுங் கூறப்படும்.

14. விஷயங்களை முற்றும் நீத்து ஞானச்சுடராய்த் தனதியல்பில் நிலைத்தலே ஸஹஜாத்மஸ்திதி யெனப்படும்.

**விடை - 3 : —**

15. வாதனைதீர் மோனத்தால் திடமாம் ஸஹஜ நிலையில் ஞானி அத்தகைய தன்னை ஐயமின்றித் தெளியலாம்.

**விடை - 4 : —**

16. அனைத்தினும் சமத்துவ மென்னுங் குறியால் ஞானமிருப்பதை ஊகித்தறியலாம்.

**விடை - 5 : —**

கோருதல் கருதித் தொடங்கிய தவம் அதனைப்பயப்பதுறுதி.

17. கோருதலுக்காகத் தவம்புரியு மொருவன் திடஞான முறின், தனது கோருதல் நிறைவேறப் பெறுமதனுல் மகிழான்.



## இரண்டாம் அத்யாயம்

### மார்க்கத்ரய முரைத்தல்

1. ஈசபுத்ரசகம் 1915- ஆம் ஆண்டு சாதுர்மாஸ்யத்தில் பகவான் மஹர்ஷி சாரத்திரட்டாம் பாவொன்றருளினர்.

2. "இதயகுகை நடுவே இரண்டிலாப் பரம்பொருளே 'நான், நான்' என ஆத்மாவாய் நேரே யொளிர்கிறது. தன்னை நாடியோ, தன்னுள் மூழ்கியோ, பிராண சலனத்தை யொடுக்கியோ அகத்துடனிதயம் புகுந்து ஆத்மாவில் நீ நிலைத்திரு."

3. பகவான் மஹர்ஷியின் வதனத்து வெளிப் போந்த வேதாந்தசாரமாம் இச்செய்யுட் பொருளுணர்ந் தவனுக்கு மீண்டும் சந்தேகமே யிலதாம்.

4. இப்பாவின் முற்பகுதியில் ஐம்பூத வடிவாய்த் தோன்று மிவ்வுடலில் (உள்ளுறையும்) ஆத்மாவினிடத் தைப் பகவான் அருளினர்.

5. ஆங்கே (ஆத்ம) லக்ஷணத்தையும், ஈசனுடன் ஐக்யத்தையு மியம்பிப் பற்பலவாம் லக்ஷணங்களைப் புறக் கணிக்கும் நேரே யவிரும் பான்மையையும் உரைத்தார்.

6. இரண்டாம் பகுதி சீடர்கள் வழிபடு நெறி பற்றிய உபதேசமாம்; அவ்வழி மூன்ருய்ப் பிரிந்தும் உட் கருத்தி லொன்றும்.

7. (தன்னைத்) தேடுதல் என்னும் வழி முதலாகக் கூறப்பெற்றது. (தன்னுள்) மூழ்குதல் இரண்டாம் வழி. பிராணுயாமம் மூன்ருவதாம்.



## மூன்ரும் அத்யாயம்

### முக்ய கர்த்தவ்ய நிருபணம்

1. தெய்வராதனுக்கும் ஆசார்ய ரமணனுக்கும் நிகழ்ந்த சம்பாஷணையை, விவேகிகள் இன்புற மூன்ரும் அத்யாயத்திற் ரெகுப்போம்.

**தெய்வரர்தன் :–**

2. இவ்வுலக வாழ்வில் மனிதன் முக்கியமாய்ச் செய்ய வேண்டியது யாது? முடிவாம் அவ்வொன்றைப் பகவான் எனக்கு விளக்கியருளல் வேண்டும்.

**பகவான் : —**

3. உயர்வை விரும்புவோன் முக்கியமாய்ப் பயன ஹைத்திற்குஞ் செயலனைத்திற்கும் இருப்பிடமாந் தனதுண் மையை யுணரவேண்டும்.

**தெய்வராதன் : —**

4. தனதுண்மையை யுணர்தற்குச் சுருக்கமாம் உபா யம் எது? மிகவுயர்ந்ததாம் அகநோக்கம் எம்முயற்சியாற் கைகூடும் ?

**பகவான் : —**

5. நினைப்பனைத்தையும் விஷயங்களிலிருந்து முழு முயற்சியுடன் திருப்பி, அலைவுஞ் சார்புமிலா ஆத்ம நாட் டத்திலேயே நிலைக்கவேண்டும்.

6 தனதுண்மை யனுபவத்திற்கு அதுவே சுருக்க வழி. இம்முயற்சியாலேயே அவ்வுயர் அகநோக்கம் பிறக்கும்

**தெய்வராதன் : —**

7. முனியரசே ! மாந்தர்க்கு நிலை கூடுமட்டும் நிய மங்கள் சாதனைக்குத் துணை புரிவனவா ?

**பகவான் : —**

8. சாதனை புரியும் நல்லோர்க்கு நியமங்கள் அம் முயற்சிக்குத் துணையாம். நிலையுற்றுக் கடமை கடந் தார்க்கு நியமங்கள் தாமே நழுவும்.

**தெய்வராதன் : —**

9. அலைவுஞ் சார்புமிலா ஆத்ம நாட்டத்தாற் போன்றே மந்த்ரங்களை ஜபிப்பதால் சித்தி பெறலாமா ?

பகவான்:-

10. அலைவிலாமனத்தால் இடையருது மந்த்ரங்களையோ, பிரணவத்தையோ ஜபிக்கும் சிரத்தையாளர்க்குத் தன்னிலை கைகூடும்.

11. மந்த்ரங்களையோ பிரணவத்தை மாத்திரமோ ஜபிப்பதால் நினைவு விஷயங்களினின்று திரும்பித் தனதுண்மைமய மாகிவிடும்.

12. ஈசபுத்ரசகம் 1947-ஆம் ஆண்டு ஏழாம் மாதம் ஏழாந்தினத்தன்று இவ்வற்புதசம்பாஷணை நிகழ்ந்தது.



## நான்காம் அத்யாயம்

### ஞான சொரூபம் பகர்தல்

வினு-1:—

1. முனிவரேறே! "நான் பிரஹ்மம்" என்னும் விருத்தி ஞானமா? "பிரஹ்மமே நான்" என்னும் புத்தி ஞானமா? அல்லது "நானேயனைத்தும்" என்பது ஞானமா?

2. அல்லது "இஃதனைத்தும் பிரஹ்மமே" என்பது ஞானமா? இன்றேல் இவ்விருத்திகள் நான்கினும் ஞானம் வேறு?

3. குருவாம் பகவான் ரமண முனிவர், சீடனும் எனது கேள்வியைத் தயையுடன் கேட்டு உத்தரமருளினுர்.

பகவான் :-

4. இவ்விருத்திகள் யாவும் மனக் கற்பனைகளே என்பதில் ஐயம் யாதுமில்லை. சுத்தமாம் சொருப நிஷ்டையையே அறிஞர் ஞான மென்பர்.

5. ஐயந்தகையும் எனதையனது வாக்கைக் கேட்டு, மீண்டு முதித்ததோர் சந்தேகம் வினவினேன்.

**வினு — 2 :—**

6. அருந்தவர்க்கரசே ! பரம்பொருளை மனோவிருத்தி வியாபிக்குமா, வியாபிக்காதா என்று என்மனத்துற்ற இவ்வையத்தைக் களைதல் வேண்டும்.

7. அடிசார்ந்தவ ரன்பனும் மஹர்ஷி இவ்வினுவைக் கேட்டுக் கடைக்கண்ணமுது பொழிந்து எனக்கிவ் வாக் கருளினர்.

**பகவான் : —**

8. தனதாத்மாவாம் பரம்பொருளை யறியத் தலைப் படும் விருத்தி அவ்வாத்மவடிவே யாகிறது; வேருமிருப்பு அதற்கில்லை.

9. முற்கூறிய (1917) ஆண்டு ஜூலைமீ 21உ மயிர்சிலிர்க்கும் இச்சிறு சம்பாஷணை எங்களுக்குள் நிகழ்ந்தது.



## ஐந்தாம் அத்யாயம்

### இதய வித்தை

1. முற்கூறியவாண்டு ஆகஸ்டுமீ 9உ இரவு முனிவர் இதயத்தைப் பற்றித் தெளிவா யுபதேசித்தார்.

2. உடலுற்றோர்க்கு நினைவனைத்தும் எதனின்றும் வெளிப்படுமோ அதுவே இதயமெனப்படும். அதற்கு வடிவு வகுத்தல் கற்பனையாம்.

3. நானென்னும் நினைவே நினைவனைத்தின் மூல மாதலின், அஃதுதிக்கு மிடமே இதயமெனச் சுருங்கக் கூறுவாம்.

4. அனாஹத சக்ரம் இதயத்தின் இருப்பிடமாயின் மூலாதாரத்திலிருந்து யோகந் தொடங்க லெதற்கு ?

5. (தூலவுடலின்) ரக்தாசயத்தினும் இதயம் வேறு. ஹ்ருத்—அயம் (நடு-இது) என்னுஞ் சொற் பிரிவின் படி ஆத்மாவே இதயமெனப்படும்.

6. அவ்விதயத்தின் இருப்பிடம் மார்பகத்தின் வலத்தே யுளது; இடப்பக்கமே யில்லை. அதனின்றும் ஸஹஸ்ராரத்திற்கு (சிரத்திற்கு) சுழுமுனை வழியே ஒளி பாயும்.

7. ஸஹஸ்ராரத்தினின்று (அவ்வொளி) உடல் முழுவதும் பரவுங்கால் உலகானுபவங்களுறும். அவற்றை வெவ்வேருய்க் காண்போன் ஸம்ஸாரியாகிருன்.

8. ஆத்மாவில் நிலைத்தோனது ஸஹஸ்ராரம் தூய வொளிமயமாம். சேர்க்கையால் நினைப்புறினும் அது அங்கே பிழைக்காது.

9. அறிபடுபொருள் அருகி லிருப்பினும், வேற் றுமை யுணராக்கால், மனம் யோகக் குலைவிற் கேதுவா காது.

10. (விஷயங்களை) ஒருங்காலும் அறிவொன்ருய் நிலைத்திருத்தல் ஸஹஜ நிலையாம்; விஷயமே தோன்ரு நிலை நிர்விகல்ப ஸமாதி யெனப்படும்.

11. உலகனைத்தும் உடலிலும், உடலனைத்தும் இத யத்திலு முளதாதலின், உலகனைத்தின் உருவடக்கம் இத யமாம்.

12. மனத்தினும் உலகு வேறன்று ; இதயத்தினும் மனம் வேறன்று ; ஆதலின் கதையனைத்தும் இதயத்தே முற்றும் முடிவுறும்.

13. அண்டத்திற் சூரிய மண்டலம் போன்று பிண்டத்தில் இதயம் இலகுமென்பர். ஸஹஸ்ராரத்திலுள்ள மனம் சந்திரபிம்பம் போன்றது.

14. சூரியன் சந்திரனுக்கு ஒளி யளிப்பதுபோல் இவ்விதயம் மனத்திற்கு ஒளியளிக்கிறது.

15. சூரியன் துலங்கா இரவிற் சந்திரனிடம் ஒளி காண்பதுபோல், இதயத்தே நிலைபெருதவன் மனத்தை மாத்திரங் காண்கிருன்.

16. ஒளியின் மூலமாந் தனதுண்மை வடிவைக் காணுது, மனத்தாற் பொருள்களை வெவ்வேருய்க் கண்டு பாமரன் மயங்குகிருன்.

17. இதயத்தே நிலைத்த ஞானியோ பகலில் வெயிலில் நிலவொளியைப் போல், மனவொளி இதயவொளியில் ஒன்றுவதைக் காண்கிருன்.

18. ஞானத்தின் பதப்பொருள் மனமென்றும் குறிப்புப் பொருள் இதயமென்றும் அறிஞர் கூறுவர். அவ்விதயமே பரம்பொருள்.

19. காண்பான் காட்சியென்னும் இவ்வேற்றறிவு மனத்திடமே யுளது. இதயத்தே வீற்றிருப்போர்க்குக் காண்பானுங் காட்சியும் ஒன்ருகிவிடும்.

20. மயக்கம், தூக்கம், அதிசந்தோஷம், துக்கம், ஆவேசம், அச்சம் முதலாங்காரணங்களால் அடிபட்ட விருத்தி தனதிடமாம் இதயமுறும்.

21. அப்பொழுது ஜீவன் தான் இதயமுறுவதை யுணர்வதில்லை; சமாதியிலோ வுணர்கின்ருன். பெயர் வேற்றுமை நிமித்தம் பற்றியதாம்.



## ஆரும் அத்யாயம்

### மனோநிக்ரகோபாயம்

1. உண்மை யறிஞரிற் சிறந்த ரமணமுனிவர் இவ்வாறு இதயவுண்மையை விளக்கியபின் மனமடக்கும் வழியை யருளினர்.

2. விஷயத்தில் மனமழுந்தி ஓயா நினைவால் உழலும் மாந்தர்க்கு வாதனைவன்மையால் மனமடங்கல் அரிதாம்.

3. சலிக்குங் கருத்தைப் பிராணவடக்கத்தாற் கட்டுக; கயிற்றிற் கட்டுண்ட பிராணிபோல் மனம் சேட்டையறும்.

4. பிராண வடக்கத்தால் மன நினைவுகளின் ஒடுக்கங் கைகூடும். நினைவுகளொடுங்குங்கால் அவற்றின் பிறப்பிடத்தில் நிலைபெறலாம்.

5. மனத்தாற் பிராணனைக் கவனித்தலே பிராண நிரோதமாம். இவ்வாறிடைவிடாது கவனித்தலாற் கும்பகங் கைகூடும்.

6. இவ்வழியே கும்பகம் பெற வியலாதோர்க்கு ஹடயோக வழிப்படி கும்பகங் கூறப்படும்.

7. ஓரளவு ரேசித்து, ஓரளவு பூரித்து, நாலத்தனை கும்பித்தலால் நாடிகளின் தூய்மை யுண்டாம்.

8. நாடிகள் தூய்மையுறின் பிராணனும் முறையே வசமாகும். பிராணன் எஃதாலும் அடங்கி நிற்றலே சுத்த கும்பக மெனப்படும்.

9. தேகான்ம பாவத்தை யொழித்தலே ரேசக மென்றும், தன்னை நாடுதலே பூரகமென்றும், தன்னிலை நிற்றலே கும்பகமென்றும் ஞானிகள் சிலர் நவில்வர்.

10. மந்த்ர ஜபத்தாலும் மனமடங்கும். அப்போது மந்த்ரமும் பிராணனும் மனத்துடனென்றும்.

11. மந்த்ராக்ஷரங்கள் பிராணனோடு பொருந்திக் கலத்தலே தியானமாம். ஸஹஜநிலை பெறத் திடமாய் நிலைத்துத் தியானித்தல் வேண்டும்.

12. உள்ள பொருளில் ஓங்கு முளத்தினராம் பெரியோ ருறவை என்றும்பேணுதலாலும் மனம் தன்னிலை யுறும்.



## ஏழாம் அத்யாயம்

### ஆத்மவிசாராதிகாரி, அதனங்க நிருபணம்

1. ஆசார்ய ரமணனுக்கும் பாரத்வாஜ கார்ஷ்ணிக்கும் நிகழ்ந்த உத்தம சம்வாதத்தை இவ்வேழாம் அத்யாயத் தியம்புவாம்.

**கார்ஷ்ணி :-**

2. ஆத்ம விசாரவியல் யாது? பயன் யாது? ஆத்ம விசாரத்தா லுறுவதினும் சிறந்த பயனை நல்கும் மற்றொன்றுளதா?

**பகவான்:—**

3. நினைவனைத்தும் எதனிடம் ஒன்று மென்றியம் பப்படுமோ, அந்'நான்' என்னும் நினைவின் பிறப்பிடத் தைத் தேடுக.

4. இதுவே ஆத்ம விசாரம்; நூலாராய்ச்சி ஆத்ம விசாரமாகாது. அகந்தை யுதிக்கு மிடத்தை நாடினுல் அது மறைந்தே போம்.

5. ஆத்மப் போலியாம் அகந்தை யொழியுங்கால் எங்கும் நிறைந்த பரிசுத்த வுண்மையாம ஆத்மாவே எஞ்சி நிற்கும்.

6. துன்பம் யாவுந் தொலைதலே ஆத்ம விசாரத் தின் பயனும். பயனனைத்தின் எல்லையிது; இதனினுஞ் சிறந்தது எதுவு மில்லை.

7. மற்றுமுள வழிகளால் அற்புத சித்திகளைப்பெற லாமெனினும், அவற்றை யுற்றவனும் முடிவில் (ஆத்ம) விசாரத்தாலேயே விடுதலை பெறுவான்.

**கார்ஷ்ணி:-**

8. இவ்வாத்ம விசாரத்திற்கு எவனை அதிகாரியென லாம்? அதிகாரத்தினடைவைத் தானே யறிதல் கூடுமா?

**பகவான்:-**

9. உபாஸனை முதலியவற்ருலோ, முற்பிறவி நல் வினைவிளைவாலோ, உடலிலும் போகங்களிலுங் குறை யுணர் மனத்தனாய்,

10. மனவாழ்வுற்று, விஷயங்களிற் சுவை சற்று மற்று, உடல் நிலையாதென் றுணர்தவனெவனே, அவனே யதிகாரி.

11. உடல் நிலையாததென்னும் உணர்வினாலும், போகங்களில் அவாவின்மையாலும்—இவ்விரு குறிகளால் தனக்கதிகார முண்டெனத் தெளியலாம்.

கார்ஷ்ணி: -

12. ஸ்நாநம், ஸந்த்யா, ஜபம், ஹோமம், வேத மோதல், தேவபூஜை, ஸங்கீர்த்தனம், தீர்த்த யாத்திரை, யஜ்ஞம், தானம், விரதங்களென்னு மிவை,

13. விவேக வைராக்யங்களால் விசாரம் புரிதற் குரியவனுக்குப் பயனளிப்பனவா? அல்லது காலத்தைக் கழிவனவா?

பகவான்: -

14. ஆசைகள் தேய்ந்துவரும் ஆரம்பாதிகாரிகளுக்கு இப்பணிகள் யாவும் மேலும் அகத்தூய்மை நல்கும்.

15. மனமொழிமெய்களால் விளையும் நல்வினை அவற் ருல் விளையுந் தீமையைத் தகையும்.

16. அகத்தூய்மை மிக்க பக்குவிகளாம் அதிகாரி கள் இக்கர்மத்திரளை உலகுபகாரமாகப் புரிவர்.

17. சாஸ்திர விதியின் பயங்கடந்த பக்குவிகளாம் அறிஞரும் பிறருக் கறிவு கொளுத்தவும், பிறர் நலனுக்காக வும் வினையாற்றுவர்.

18. உத்தமனே! பற்றற்றுப் பேதபுத்தி யற்றுப் புரி யும் புண்ணியங்கள் விசாரத்திற்குத் தடையாகா.

19. அவை புரியாததாற் பக்குவியாம் ஆத்மவிசா ரிக்குப் பாபமு மில்லை. ஆத்மவிசாரமே புனிதத்திற் பனிதமாம் பெரும் புண்ணியம்.

20. அனைத்தையுந் துறந்து தனித்துத் தவமாற்றுதலும், பிறர் பொருட்டு வினையாற்றுதலுமாம் இருவகை நிலை பக்குவிகளாம் அதிகாரிகளிடையே காணப்படும்.

கார்ஷ்ணி :-

21. விடுதலைக்கு ஆத்ம விசாரத்தினும் வேரும் வழியோ, வழிகளோ உளவாயின், பகவான் அதையெனக் கருளல் வேண்டும்.

பகவான் :-

22. ஒருவன் அடைய முயல்கிறான்; மற்றவன் அடைபவன் யாரென நாடுகிறான். முதலாமவன் பல காலஞ் சென்று முடிவில் ஆத்மாவை யடைகிறான்.

23. அவனுக்குத் தியானத்தால் புத்தி ஒருமுகப்படுகிறது. புத்தியோர்மையாற் றனதுண்மையில் நிலைத்தல் கூடும்.

24. ஆதலின், தியானிப்பவன் விரும்பாவிடினும் ஆத்ம நிஷ்டையை யடைந்தே தீருவன். விசாரிப்பவனோ அறிந்து தன்னிற்றான் நிலைக்கிறான்.

25. தேவதையையோ, மந்த்ரத்தையோ, பிறிதொரு சீரிய லக்ஷயத்தையோ தியானிப்பவனுக்கு அவன் தியானிக்கும் பொருள், முடிவில் ஆத்மப் பேரொளியில் ஒன்றி விடும்.

26. தியானிப்பவன், தன்னை நாடுவோன்-இவ்விருவர்க்கு மிவ்வாறு கதியொன்றே. ஒருவன் தியானத்தால் சாந்தியுறுகின்றான்; மற்றவன் அறிந்தடங்குகின்றான்.



## எட்டாம் அத்யாயம்

### ஆச்ரம விசாரம்

1. கார்ஷ்ணியின் மற்றோர் வினவைக் கேட்டு பகவான் மஹர்ஷி நான்கு ஆச்ரமத்தினர்க்கும் உரியதோர் அதிகாரத்தை விளக்கினர்.

2. மாணவனும், இல்வாழ்வோனும், வனத்துறைவோனும், துறவியும், பெண்டிரும், தாழ்ந்த வருணத்தினரும்-பக்குவமுள்ள எவரும்-பிரஹம விசாரம் புரியலாம்.

3. படிப்படியாய்ப் பரமனை யுறுதற்கே ஆச்ரமவொழுங்கு. பரிபாகம் மிக்கோர்க்கு ஆச்ரமக் கிரமந் தேவையன்று.

4. உலக காரியங்கள் நடைபெறுதற்காக ஆச்ரம வரிசை விதிக்கப்பட்டுளது. முதன் மூன்று ஆச்ரம தர்மங்கள் ஞானத்திற் கிடையூறுகா.

5. தூய ஞானமே துறவு; காவித்துணியும் மழித்தலு மன்று. இடையூறுகள் பலவற்றை விலக்குதற்காகவே (ஸந்யாஸ) ஆச்ரம மென்பர்.

6. விரதங்களாலும் வித்தையாலும் ஞானப்பயிற்சியாலும் பிரஹ்மசர்யாச்ரமத்தில் சக்தியை நன்கு வளர்ப்பவன் பின்னர் மிகச் சுடருவான்.

7. சுத்த பிரஹ்மசர்யத்தால் இல்வாழ்வில் மாசற்றிலகலாம். இல்லறம் அனைவர்க்கும் உதவுவதன் பொருட்டெனக் கூறப்படும்.

8. எவ்வாற்றுனும் பற்றின்றி வாழும் இல்லறத்தோர்க்கும் பரவொளி நனி துலங்கு மென்பதில் ஐயமேயில்லை.

9. மூன்ரும் ஆச்ரமம் தவத்திற் கென்பர் உத்தம அறிஞர். இல்லாளுடனே, இன்றியோ, மூன்ருமாச்ரமஞ் சாரலாம்.

10. தவத்தாற் றிவினை பொசுங்கிச் சித்த பரிபாகம் பெற்ற யோகிக்கு நான்கா மாச்ரமம் காலத்திற் ருனே நேரும்.

11. இவ்வேழெட்டு அத்யாயங்களி லுள்ள பகவானது உபதேசம் முற்கூறிய (1917-ஆம்) வருஷம் ஆகஸ்டுமீ 12உ நிகழ்ந்தது.



## ஒன்பதாம் அத்யாயம்

### கிரந்திபேதமோதல்

1. கற்றோர்க்கும் ஐயந்தருங் கிரந்திபேத விஷயமாய் மஹர்ஷியை யான் ஆகஸ்டுமீ 14உ இரவு வினவினேன்.

2. அருட்பெருஞ் ஜோதியாம் பகவான் ரமண மஹர்ஷி எனது வினவைச் செவியுற்றுத் தெய்விக வியல்புடன் சற்றே யாழ்ந்திருந்து உரைக்கலானுர்.

3. உடலுக்கும் ஆத்மாவிற்கு முள்ள சேர்க்கையே கிரந்தி யெனப்படும். இதனுலேயே ஆத்மாவிற்கு உடலுணர் வுண்டாகின்றது.

4. உடல் ஜடம்; ஆத்மாவோ ஞானமயம்; இவ்விரண்டின் சேர்க்கை புத்தியால் ஊகிக்கப்படுகிறது.

5. ஞானவொளியால் மருவப்பெற்று உடல் இயங்குகின்றது. துயில் முதலியவற்றில் (விஷயங்களை) உணர்தலின்மையினுல், ஆத்மாவிற்கு இடமொன் றுளதென் ஊகிக்கலாம்.

6. நுட்பமாம் மின்னொளி முதலன தூலமாங் கம்பி முதலியவற்றிற்போல உடலில் நாடியில் ஞானவொளி பரவும்.

7. சூரியன் உலகை விளக்குதல் போலச் சுடர்மிகு ஞானவொளி இடமொன்று பற்றி உடலனைத்தையும் ஒளிர்விக்கிறது.

8. அவ்வொளி பரவுதலாலேயே, உடலின் அனுபவங்க ளுண்டாகின்றன. அவ்விடத்தையே அறிஞர் இதயமென்பர்.

9. நாடிகளின் சக்திவிலாஸத்தால் (அவற்றில்) ஞானக்கதிர் பரவுதல் தெளிவாம். உடலின் சக்திகள் யாவும் தனித்தனி நாடிகளைப் பற்றியுள.

10. சைதன்யம் தனியோர் நாடியில் இலகும். அதையே சுழுமுனையென்றும், ஆத்மநாடியென்றும், பரையென்றும், அமுதநாடி யென்றும் பலர் பலவா றியம்புவர்.

11. ஆத்மவொளி உடல் முழுதும் பரவப் பெற்ற அபிமானியாம் ஜீவன் உடலே தானென்றும், அதனினும் உலகம் வேறென்றுங் கருதுகிறான்.

12. அபிமானத்தையும், 'தேகம் நான்' என்னும் புத்தியையும் முற்றிலும் நீத்து ஒருமுகமாய் விசாரிக்கும் விவேகிக்கு நாடிகளின் கடைதல் (மதனம்) உண்டாகும்.

13. இவ்வாறு நாடிகளின் கடைதலால் ஆத்மா அவற்றினின்றும் பிரிபட்டு அமுதநாடி ஒன்றையே பற்றி ஒளிசிறக்கும்.

14. சுடர்மிகு ஞானவொளி ஆத்மநாடி யொன்றிலேயே ஒளிருங்கால் ஆத்மாவிற் கன்னியம் யாதுந் தோன்றாது.

15. அடுத்து விளங்குவதும் வேரு யிலகாது. பாமரனுக்கு உடல்போல அவனுக்கு ஆத்மா தெளிவாய்த் துலங்கும்.

16. ஸம்ஸாரிக்கு உரு முதலிய தோன்றுதல் போன்றே, ஆத்மாவே உள்ளும் வெளியும் எங்கும் எவனுக்கு விளங்குமோ அவன் (இதயக்) கட்டறுந்தோனுவன்.

17. நாடீபந்தம் அபிமான மெனக் கிரந்திக ளிரண்டாம். ஆத்மா சூக்ஷ்மமாயினும் நாடீபந்தத்தால் தூலமனைத்தையுங் காணும்.

18. அகில நாடிகளினின்றுந் திரும்பி ஒரே நாடியைச் சாருங்கால் ஆத்மவொளி கட்டுவிட்டுத் தனதியல் புறும்.

19. நெருப்பிற் பழுத்த இரும்பு குண்டு நெருப்புமயமாய்க் காணுதல் போல, ஆத்மவிசாரத்தீ காய்ந்தவுடல் அம்மயமே யாம்.

20. உடல் முதலன பற்றிய பழைய வாசனைகள் அப்பொழு தொழியும். உடலற் றிலகுதலின் கர்த்ருத்வம் அவனுக்கிலது.

21. கர்த்தா அவனலனுதலின் அவனுக்குக் கன்மங் கழன்ற தெனப்படும். அவனுக் கன்னியம் யாதுமிலதாதலின் சந்தேக மெதுவும் உதியாது.

22 ஒருமுறை கட்டறுந்தோன் மீண்டுங் கட்டுருன். அதுவே யுத்தம சக்திநிலே; அதுவே யுத்தம சாந்திநிலே.



## பத்தாம் அத்யாயம்

### சங்க வித்தை

1. யோகநாத யதிக்கும் ரமணமஹர்ஷிக்கும் நடைபெற்றதும், சமூகத்திற் கின்பளிப்பதுமாம் சம்பாஷணையைப் பத்தாமத்யாயத்தில் இங்கே பதிப்போம்.

**யோகநாதன் :—**

2. முனிநாயக! சமூகத்திற்கும் சமூகத்தினர்க்குமுள்ள சம்பந்தம் யாதென்பதைச் சமூகநலனுக்காகச் சொல்லவேண்டும்.

**பகவான் : —**

3. சாதுசிரேஷ்டா! பற்பல வொழுக்க வியல்பினரைக்கொண்ட சமூகம் உடல்போன்றதென்றும், சமூகத்தினர் அவயவங்கள்போ லென்றும் அறிதல் வேண்டும்.

4. யதியே! அவயவம் உடலுக் குதவுவதுபோற் சமூகத்திற்குதவும் சமூகத்தான் சிறப்பெய்துகிறுன்.

5. வாக்காலும் மனத்தாலும் உடலாலும் சமூகத்திற் குதவியுறுமாறு தானெக்காலும் ஒழுகித் தன்னைச் சார்ந்தவர்களையுந் தெளிவித்தல் வேண்டும்.

6. சமூகத்திற்கு நலனுண்டாம்வண்ணம் தன்குலத்தை யமைத்து, மீண்டும் சமூகமோங்குதற்காகவே குலத்தைச் சிறப்புறுத்துக.

**யோகநாதன்:-**

7. சாந்தியைச் சிலரும், சக்தியை அறிஞர் வேறு சிலரும் புகழ்கின்றனர். இறைவ! இவற்றுள் சமூகநலத்திற்குகந்த சீர்மிகு குணமெது?

**பகவான் : —**

8. தன்மனந் தூய்மையுற அமைதியும், சமூக மோங்குதற்குத் திறமையும் வேண்டும். திறமையாற் சமூகத்தை யுயர்த்தியபின் அமைதியை நிலைநிறுவல் வேண்டும்.

**யோகநாதன் :—**

9. ரிஷிகுஞ்ஜரனே ! பூதலத்தில் மனித சமூகமனைத்தும் ஒருங்கே யடைதற்குரிய உயர்நிலை யாது ?

**பகவான் : —**

10. சமவுணர்வுற்ற சகோதரப் பான்மையே மனித சமூக மனைத்தும் ஒருங்கே யடைதற்குரிய சிரிய நிலையாம்.

11. ஜீவிகள் ஒருவரோ டொருவர் சகோதரப் பான்மை யெய்தினுல் உத்தமசாந்தி நிலவும். அப்பொழுது இப்புவி முழுதும் ஓர் வீடனவே ஒளி திகழும்.

12. யோகநாத யதிக்கும் தயைமிகு மஹர்ஷிக்கும் இச்சம்பாஷணை ஆகஸ்டுமீ 15வ பகலில் நடைபெற்றது.



## பதினொன்ரும் அத்யாயம்

### ஞானசித்தி சமரசத்தன்மை கூறல்

1. பதினுரும்நாளிரவிற் றனிமையில் முனிவர் முதல்வனும், பிரஹ்மஞானிகளிற் சிறந்தவனும், ஆத்மாவில் நீங்காது நனிநிலைத்தவனும்.

2. பெருந்தகையும், மாயாமனிதனுமாம் ஸ்ரீ ரமண குருவை, அடைதற்கரிய ஞானம் பெறுதற்காக, அணுகித் துதிக்கலானேன்.

ANo 28423



3. உத்தமநிஷ்டை யுன்னிடமே; தெளிந்தமதியும் உன்னிடமே. நீருக்கெல்லாம் கடல்போல அறிவுக்கெல்லாம் உறைவிடம் நீ.

4. கீர்த்திமிக்கோய்! நீ பிள்ளைப்பிராயத்திலே பதினேழாமாண்டிலே யோகியர்க்கு மரிதாம் அனுபவ ஞான முற்றனை.

5. காணப்படும் இஃதனைத்தும் நிழல்போலிலகும் நினது நிஷ்டையை, இறைவ! எவனே விவரிக்குந் திறத்தான்?

6. கொடிதாம் பிறவிக்கடலுண் மூழ்கி, இங்குமங்கும் அலைப்புண்டு, பெருந்துயர் கடக்க விரும்புவோருறும் உத்தமகதி நீ யொருவனே.

7. பிரஹ்மமயனே! பிரஹ்மிஷ்டர்களின் தலைவனும் சுப்ரஹ்மண்யனே மானிடம் பூண்டு வந்தவனென, இறைவனருளிய ஞானத்தால் அடிக்கடி யானுன்னைக் காண்கின்றேன்.

8. திருவேரகத்தும் தணிகையிலும் திருவேங்கடத்தும் நீயில்லை. ஐய! நீ அண்ணுமலையி லுளதுண்மை.

9. பணிவிடைபுரிந்த நாரதமஹர்ஷிக்கு நுட்பமாம் பிரஹ்மவித்தையை, நாத! நீ முன்னொருகால் உபதேசித்தனை.

10. வேதமுணர்ந்தோர் உன்னைப் பிரஹ்மரிஷியாம் ஸனத்குமார னென்பர்; ஆகமமுணர்ந்தோர் அமராதிபனும் சுப்ரஹ்மண்ய னென்பர்.

11. இதனிற் பெயர் வேறுபாடே யன்றிப் பொருள் வேறுபாடில்லை. உண்மையில் ஸனத்குமாரன் ஸ்கந்தன் என்பவை உனதிரு பெயர்களே.

12. ஐய! அன்ருெருகால் குமரிலனென்னும் அந்தணப் பெரியோஞ யவதரித்து வேதங்கூறும் அறத்தை நீ நிலைநிறுத்திஞய்.

13. பகவன்! தமிழகத்திற் சமணரால் அறங்குன்றியக் கால் ஞானசம்பந்தனுய் நீ யவதரித்துப் பக்தி நெறியைப் பாலித்தாய்.

14. நூலுணர்வோடு மகிழ்வோராற் றகைதலுற்ற பிரஹ்மஞானத்தைக் காத்தருளப் பெருந்தகையே இன்று நீ யவதரித்துளாய்.

15. தலைவ! சிடர்களின் சந்தேகங்கள் பலவற்றை நீக்கியருளினை. எனதிவ்வையத்தையுங் களைதலுன் கடஞும்.

16. முனிநாயக! ஞானமும் சித்திகளும் முரண்படுவனவா, அல்லது பரஸ்பர சம்பந்த முடையனவா?

17. அடிபணிந் திவ்வாறு வினவிய வென்னை ஆழ்ந்த நோக்குடன் பார்த்து, ஸ்ரீரமணபகவான் இவ்வசன மியம்பினுர்.

18. ஸஹஜ நிலையி லுறைபவன் இயல்பாகவே நாடோறுந் திறன்மிகு தவ மாற்றுகிருன். அந்நிலையிற் சோம்பலே யிலது.

19. இயல்பாம் ஆத்மாவில் நிலைபெறுதலே திறன்மிகு தவம். அவ்விடையருத் தவத்தாற் கணந்தோறும் பரிபாக முண்டாம்.

20. காண்பவனுக்குக் காலத்திற் பரிபாகத்தாற் சித்திக ளுண்டாம். புசிப்புண்டாயின் ஞானியும் அவற்றுடனுடுவான்.

21. உணரப்படுங்காலும், உலகம் ஞானிக்கு ஸ்வரூபத்தினும் வேருகாதது போன்றே, சித்தி விளையாட்டும் ஸ்வரூபத்திற்குப் புறம்பன்று.

22. புசிப்பிலா ஞானி ஆற்றல் நிறைந்தும் அலையறு கடல்போல நிலை சிறிதும் அசையான்.

23. இயல்பாகவே தன்னிலை நின்ருேன் பிறிதொரு வழி தேரான். அவ்வாத்மநிலை ஆற்றலனைத்தும் ஒன்றியதாம்.

24. முயற்சியிலாத் தவமே ஸஹஜ நிலை. அந்நிலையிற் பரிபாகத்தால் சக்திகள் (சித்திகள்) உண்டாம்.

25. ஆத்மாவில் என்றும் நிலைபெற்ருேன் பலர் சூழ விருந்தாலும் கடுந்தவமே புரிவான். தனிமையை யவன் வேண்டான்.

26. ஞானி யிலகுவது எங்கும் நிறைந் தெல்லாம் வல்லதனதுண்மையிலாதலின், ஞானம் சக்தியற்ற தென் றெண்ணுபவன் அறவே யறியாதவன்.



## பன்னிரண்டாம் அத்யாயம்

### சக்தி விசாரம்

1. பெரிய மனத்தினனும் சீரிய புண்யாத்மாவுமாகிய பாரத்வாஜ கபாலி ஸ்ரீரமண குருவை 19வ யன்று பின்வருமாறு வினவினன்.

கபாலி :—

2. பகவன்! அறிவான், அறிவு, அறிபடுபொருளென்னும் இம் மூன்றும் ஞானிகளுக்கும் பாமரர்க்கும் உலகவாழ்விற் காணப்படுகிறது.

3. பின்னர் எச்சிறப்பால் ஞானி பாமரனினும் உயர்ந்தவ னென்னும் எனதையத்தை, நாத! நீ போக்கியருளல் வேண்டும்.

பகவான்:—

4. தீரா ! எவனுக்கு அறிவான் சொரூபத்திலும் வேறலனே, அவனுக்கு அறிவும் அறிபடுபொருளுங்கூட சொரூபத்தினும் வேருய்த் தோன்ரு.

5. பற்றுற்றவனும் எவனுக்கு அறிவான் சொரூபத்தினு மன்னியமோ, அவனுக்கு அறிவும் அறிபடுபொருளும் சொரூபத்தினும் வேருகவே தோன்றும்.

6. பேதத் தோற்றத்திலே மெய்யாம் அபேதத்தை ஞானி யுணர்கிருன். பாமரனே பேத தோற்றத்தி லகப்பட்டுச் சிதைகிருன்.

கபாலி:-

7. நாத ! முப்புடி மயமாம் இப்பேதங்கள் தோன்றுதற் கிடமாம் சொரூபம் சக்தியுளதா, சக்தியற்றதா?

பகவான்: -

8. செல்வ ! முப்புடிமயமாம் இப்பேதங்கள் தோன்றுதற் கிடமாம் சொரூபம் எல்லாம் வல்லதென்பர் மறைமுடிவறிந்தோர்.

கபாலி:-

9, நாத ! ஈசனது சக்தி யென்று மறைமுடி வுணர்ந்தோர் இசைக்கு மதனில் அசைவுளதா, இலதா?

பகவான்: -

10. பிள்ளாய் ! சக்தியின் அசைவினலேயே உலகங்களுற்பத்தியாம். அசைவுக்கிடமாம் பொருளோ என்றும் அசைவதில்லை.

11. அசலத்தின் சக்தியாம் எதனசைவு உலகிற்குக் காரணமோ, அதுவே இத்தகைய தெனவியலா மாயை யென்பர் அறிஞர்.

12. காண்பவனுக்கு அசைவு உண்மைபோற் ருேன்றும். உத்தமனே! உண்மையிற் சொருபத்திற்குச் சலனமே யின்று.

13. ஈசனுக்கும் சக்திக்கும் பேதந் தோன்றல் பார்வையாலேயே பார்வை மூலத்தே யொன்றினுல் இவ்விரண்டும் ஒன்ருும்.

கபாலி :—

14. காணப்படும் பிரஹ்மாண்டகோடிகளைப் படைக்கும் ஈசனது செயல் நித்தியமா, அன்றி அநித்தியமா என்பதைப் பகவான் பகர வேண்டும்.

பகவான்

15. தனது உத்தமசக்தியாற் பரமன் அசைந்தும் அசைவிலன் ஞானிகளுக்கே விளங்கும் ரகசியமிது.

16. அசைவே செயல்; செயலே சத்தி; சக்தியாற், பரமன், காணு மிஃதனைத்தையும் வெளிப்படுத்தினுன்.

17. பிரவிருத்தி நிவிருத்தியெனச் செயல் இருவகையாம். "எங்கு அனைத்தும் ஆத்மாவே யானதோ" என்னும் மறை நிவிருத்திபரமாகும்.

18. 'அனைத்தும்' என்னுஞ் சொல்லால் துவிதந் தோன்றுங்காலத் துள்ள பன்மையும், 'ஆனதோ' என்பதால் ஏதோ வோர் செயலும் பெறப்படும்.

19. 'ஆத்மாவே' என்பதால் ஆத்மாவினின்று முதித்த விசேஷங்கள் யாவும் ஒருங்கே அதனிடமே யொன்று வனவெனக் கூறப்பெற்றது.

20. உத்தமனே ! சக்தியைவிட்டு சொருபம் விளங்காது. செயல், இடமென்று சக்திக் கிரு பெயர்களாம்.

21. உலகப் படைப்பு முதலாந் தொழிலே செய லென்றும், சொரூபமே இடமென்றும் அறிஞர் நவில்வர்.

22. யாவுந் தானே யாதலின் சொரூபம் பிறிதொன் றைப் பற்றியதே யன்று. இவ்வாறு சக்தியைச் செயலாக வும் இடமாகவு முணர்ந்தவனே உண்மையுணர்ந்தோன்.

23. செயலின்றேல் ஸத்வஸ்து (உள்ள பொருள்) நாநா வாதல் கூடாது. சக்தி கடந்து உண்மை யோங் கினுல் விருத்தி யுதியாது.

24. காலத்தால், உலகின் பெரும்பிரளயமுண்டாயின், இச்செயல் சொரூபத்தின்கண் அடங்கினுற்போலிருக்கும்.

25. இவ்விவகார மணைத்தும், படைப்பும், முப்புடி மயமாம் அறிவும் சக்தியின்றி யுண்டாகா.

26. இடமாயிருத்தலாற் சொரூபமென்றும், படைத் தல் முதலாந் தொழிலாற் செயலென்றும் - இரு பெயர் களால் அனைத்தினுமுயர் சக்தி யொன்றே வழங்குறும்.

27. உத்தமனே! அசைவே சக்தியின் லக்ஷணமென் போர் அதற்கிடமாம் பரம்பொருளொன்றை யொப்பல் வேண்டும்.

28. ஒன்ரும் அப்பரம்பொருளைச் சிலர் சக்தியென் பர்; சொரூபமென் றறிஞர் சிலரும், பிரஹ்மமென்றும் புருஷனென்றும் வேறுசிலரு மியம்புவர்.

29. குறியாலும் நேராகவுமென உண்மை யுறுதல் இருவகையாம். குறியால் உண்மை விவரிக்கப்படும்; நேரா யனுபவிக்கப்படும்.

30. ஆதலின் சொரூபத்தை யுணர்தல் செயலாலும் வாஸ்தவத்திலும்-பொதுவாகவும் நேராகவும்-என இரு வகை யென்பர்.

31. இடத்தைச் சொரூபமென்றும், செயலைக் குறி (லக்ஷணம்) என்றும் பகர்வர். விருத்தியால் (செயலால்) அதன் மூலத்தையுணர்ந்து ஆச்ரயத்தில் நிலை பெறலாம்.

32. சொரூபம் குறி (லக்ஷணம்) உள்ளது. குறியும் சொரூப முள்ளது. இவை யிரண்டிற்கும் தாதான்மிய சம்பந்தமாம்.

33. உத்தமனே! இங்ஙனம் செயலெனப்படும் பொதுவாங் குறியாற் சொரூபம் குறிக்கப்படுதலின் அது எக்காலுஞ் செயலுடையது.

34. உண்மையிற் காணிற் பரம்பொருளினுஞ் செயல் வேறன்று. இவ்வேற்றுணர் வெல்லாங் கற்பனையே.

35. சக்திவிலாஸ மெனப்படும் இப்படைப்பு ஈச கற்பனையாம். இக்கற்பனையைக் கடந்தாற் சொரூபமே எஞ்சி நிற்கும்.



## பதின்மூன்றும் அத்யாயம்

### ஸ்திரீபுருடர்க்குத் துறவிற் சமவதிகார நிருபணம்

1. ஆத்ரேயகுல நிலா, வாஸிஷ்டகுல மருகி, தீரனும் பிரஹ்மவித்துமாம் மஹாதேவனது தாய்,

2. பதிவிரதைகட் கோர் சான்று, உலகத் தொண்டு விரதம்பூண்டவள், தேவர் துதிக்குஞ் சிறப்புள 'க' காராதி ஸ்ரீவித்தையை யணிந்தவள்,

3. விந்திய மலைக்குத் தெற்கே 'தாரா' வித்தையின் ஆதி குரு, எனது தவத்தோழி, பிரியை விசாலாக்ஷி, புகழ் மிக்காள், எழின் மிக்காள்.

4. எல்லோர்க்கும் நல்லோனும் ஸ்ரீரமணமுனிவரை என் வாயிலாக இரு கேள்விகள் கேட்டாள்.

5. ஆத்மாவில் நிலைக்கும் மாதர், இடையூறு கருதி, வீடுவிட்டுத் துறவு பூணுதல் சாஸ்திர சம்மதா ?

6. ஜீவன்முக்தையின் தேகம் விழுங்கால், அவ்வுடலை எரிப்பதா, சமாதி செய்வதா ? எது செய்யத்தகும் ?

7. இவ்விரு வினாக்களையுங் கேட்டு, சாஸ்திரார்த்த மனத்தின் உண்மையுணர்ந்த பகவான் ரிஷிசிரேஷ்டர் அதன் முடிவியம்பினார்.

8. கூடாதென்று கூறப்படாததால், சொருபத்தில் நிலைக்கும் பக்குவம்பெறு மாதர் துறவு பூணுதல் தோஷ மாகாது.

9. விடுதலைநிலையும் ஞானமும் பொதுவாதலின் ஜீவன்முக்தையை எரித்தலாகாது. அவ்வுடல் தேவா லயமாம்.

10. முக்தனும் புருஷனது மூர்த்தியை எரிப்பதா லுண்டாம் எனப்படுந் தோஷம் யாவும் முக்தையாம் ஸ்திரீயின் மூர்த்தியை எரிப்பதாலு முண்டாம்.

11. நுண்ணறிவாளராம் ரமண மஹர்ஷி ஞானவதி யைப் பற்றிய இவ்விஷயத்தை 21௳ பகலில் விளக்கினார்.



## பதினான்காம் அத்யாயம்

### ஜீவன்முக்தி விசாரம்

1. 21௳ இரவு, உத்தம விவேகியும், மேதாவியும், வாசாலனும், சிவகுலனுமாம் பாரத்வாஜ வைதர்ப்பன்

2. ஜீவன் முக்தியைப்பற்றி மஹர்ஷியை வினவினன். எல்லோருங் கேட்டிருக்க, மஹர்ஷி இவ்வாறருளினர்.

3. நூலுணர்வாலோ, உலகுணர்வாலோ அலைவுருத் திடமிகு ஸ்வரூப நிஷ்டையே ஜீவன்முக்தி யெனப்படும்.

4. ஞானம் ஓர்தன்மைத்தாதலின் முக்தியும் ஓர் வகையேயாம். உடலிலிருந்தும் விடுபட்டவனே ஜீவன் முக்தன்.

5. பிரஹ்மலோகஞ் செல்வதாக சாஸ்திரங்களிற் கூறப்படும் முக்தனுக்கும் ஜீவன்முக்தனுக்கும் அனுபவத் திற் பேதமில்லை.

6. அறிஞ! இங்கேயே பிராணனடங்கும் மஹாத் மாவின் அனுபவமும் முன்னிருவரது போன்றதே.

7. ஸ்வரூப நிஷ்டையும் பந்தமறுதலும் பொதுவா தலின் முக்தி ஒருதன்மைத்தே. வேறுபாடு பிறர் புத் திக்கே தோன்றும்.

8. உத்தமனே! ஆத்மாவில் நிலைத்து உயிரோடில குங்காலே விடுதலையுற்ற மஹாத்மாவின் பிராணன் இங் கேயே யடங்கும்.

9. சிலவிடத்தே ஜீவன்முக்தனுக்குத் தவத்தின் பரிபாகத்தாற் காலப்போக்கில் உருவுளபோதே பரிசமின் மையு முண்டாம்.

10. மீண்டும் பரிபாகத்தால் உருவின்மையுங்கூடும். அவன் தூயஞான வடிவனுய் ஸித்தனுய்த் திகழ்வான்.

11. உத்தமனே! உடலைப்பற்றிய இவ்விருசித்திகளும் தேவதானுக்ரகத்தாற் சிறிது காலத்திலேயே கூடலாம்.

12. இவ்வேற்றுமை பற்றி ஞானசம்பத்திற் கூடுதல் குறைவில்லை. சரீரியாயினும் அசரீரியாயினும் ஆத்மாவில் நிலைத்தோன் விடுதலை பெற்றவனே.

13. நாடியின் மூலம் அர்ச்சிராதிவழியே மேனேக்கிச் செல்வோன் ஆங்குதிக்கும் ஞானத்தால் உடனே விடுபடுவான்.

14. உபாஸனையாற் பக்குவமிகும் உளத்தினனும் யோகிக்கு இறைவனருளால் நாடியின் மூலம் உயர்கதியுண்டு.

15. எல்லா வுலகங்களிலும் நினைத்தவா றுலவுதலும், விருப்பால் உருப்பல பெறுதலும், அனுக்ரகித்தலுங்கூட அவனுக் குண்டெனப்படும்.

16. அறிஞர் சிலர் கைலாசமே முக்தருலகென்றும், சிலர் வைகுண்ட மென்றும், மற்றுஞ் சிலர் சூரிய மண்டலமென்றும் புகல்வர்.

17. பூமி முதலாம் உலகங்கள் போன்றே முக்தருலகவை யனைத்தும் அற்புத மஹிமை வாய்ந்த சத்தியாற் பரம்பொருளினிடம் கற்பனையாய் நிற்பவையாம்.



## பதினைந்தாம் அத்யாயம்

### சிரவண மனன நிதித்யாஸன நிரூபணம்

1. நாத! சிரவண மென்பதெது? மனனமெனக் கொள்வதெது? முனிகுலோத்தமா! நிதித்யாஸன மெனப் படுவதெது?

2. 22வ காலை ஞானிகளிற் சிறந்த பகவானை யானிவ்வாறு வினவ, அன்னூர் சீடர் குழாத்திற்கு உரைத்தனர்.

3 உபநிஷத் வாக்யங்களை அர்த்த வியாக்யானங்களுடன் குருமுகமாய்க் கேட்டலே சிரவணம் என்பர் சிலர்.

4. ஆத்மஞானியாம் ஆசாரியனிடமிருந்து ஸ்வரூபத்தை யுணர்த்தும் வாக்குகளை எம்மொழியிற் கேட்டாலும் அது சிரவணமே என்பர் பிறர்.

5. வேதாந்த வாக்யங்களைக் கேட்டோ. குருவின் அருண்மொழியைக் கேட்டோ, அன்றி, முற்பிறவி நல்வாசனையால் இவ்விரண்டு மில்லாமலே யுணர்ந்தோ,

6 "உடல் முதலியவற்றினும் வேறும் நீ 'நான் என்னும் பான்மைக்கு மூலமாவாய்" என்று உள்ளத்தினின்று கேள்வியுறுதலே உண்மையிற் சிரவணமாகும்.

7. நூற்பொருளாய்வே மனன மென்பர் சிலர். ஐயனே! தனதுண்மையை விசாரித்தலே யதார்த்த மனனம்.

8. போற்றலுறுவோய்! சந்தேகவிபரீதமற்ற பிரஹ்மாத்ம ஞானமே நிதித்யாஸனம் என்பர் சிலர்.

9. சந்தேகவிபரீதமற்ற தெனினும் சாஸ்திரத்தாலுற்ற ஐக்ய ஞானம் அனுபவத்திற் குதவாது.

10. வாஸிஷ்டா! நூறு நூல் கற்றுலும் நீங்காத ஐயந்திரி பிவையிரண்டும் அனுபவத்தாலேயே நீங்கும்.

11. நம்பிக்கையுள்ளவனது ஐயந்திரிபுகளை சாஸ்திரம் அகற்றும். நம்பிக்கை சற்றுக் குறைந்தால் அவையிரண்டும் மீண்டு முதிக்கும்.

12. வாஸிஷ்டா! ஸ்வரூபானுபவத்தாலேயே அவையிரண்டின் வேரறும். ஆதலின் ஸ்வரூபத்தை நேரே யுணர்தலே நிதித்யாஸன மெனப்படும்.

13. ஐயனே! ஸ்வருபத்தில் நிலைபெருது புறத்தே யலைபவனுக்கு, நூறு நூலாய்ந்தாலும் நேராம் அநுபவ ஞானம் வாய்க்காது.

14. வஸிஷ்டகுலசிரேஷ்டா! ஸ்வருபநிஷ்டை இயல்பா யொருவனுக்குறின், அதுவே முக்தியும், பரநிஷ்டையும், ஸாக்ஷாத்காரமுமாம்.



## பதினாரும் அத்யாயம்

### பக்தி விசாரம்

1. பக்தியைப்பற்றி வினவப்பெற்ற புருஷோத்தமனும் பெருந்தகை பகவான் ரமணமஹர்ஷி அருளினர்.

2. அனைவர்க்கும் பிரியமானது ஆத்மா; ஆத்மாவினும் பிரியமானதுவேறென்றின்று. எண்ணெய் வீழ்ச்சி போல் இடையரு அன்பே பக்தியாம்.

3. தனதாத்மாவினும் இறைவன் வேறலனென்று அன்பால் அறிஞனுணர்கிருன்; மற்றவன் ஈசனை வேருகக் கருதினும் ஆத்மாவிலேயே கலந்து நிற்கிருன்.

4. சர்வேசனிடம் தைலதாரைபோல் அன்புப் பெருக்குண்டாயின், அது விருப்பமிலாளது புத்தியையும் ஸ்வரூபத்திற் சேர்ப்பது திண்ணம்.

5. தன்னை வரையற்றவனுகவுஞ் சிற்றறிவினனுகவுங் கருதும் அறிவான்வடிவுறும் அன்பன் துயர் யாவும் விலகுதற்கு.

6. எங்குநிறை பரம்பொருளை இறைவனுகக் கருதி வழிபட்டு, அதையே முடிவில் அடைகின்ருன்.

7. உத்தமனே! இறைவனை நாமவடிவங்களுடன் ஏத்துபவன் அந்நாமவடிவங்களால் நாமவடிவனைத்தையுந் தாண்டுகிருன்.

8. பக்தி நிறைவுறின் ஒரு காற் கேட்டலே போதிய தாதலின் அது பூரணஞானத்தின் பொருட்டாம்.

9. தாரையாய்ப் பெருகாதது விச்சின்ன பக்தியெனப் படும். அது பராபக்திக்குக் காரணமாதல் துணிபு.

10. கோருதல் கருதி அன்புசெய்வோன், அதுபெற் றும் நிறைவுருது, முடிவில், மீண்டும், நிலைத்தபேரின்பிற் காக இறைவனை யடைவான்.

11. காமியங்கலந்த பக்தியும் கோரிய தெய்தியதும் நீங்குவதில்லை. பரமபுருஷனிடம் நம்பிக்கையோங்கி மேன் மேலும் அன்பு வளர்கிறது.

12. காமியபக்தியுங் காலத்தில் வளர்ந்து பூரண பக்தியாகும். ஞானத்தாற்போன்றே பூரண பராபக்தி யால் பவத்தைக் கடத்தலாம்.



## பதினேழாம் அத்யாயம்

### ஞானப்ராப்தி விசாரம்

1. 25உ அன்று பகல் அறிஞரிற் சிறந்த வைதர்ப் பன் வணக்கவொடுக்கத்துடன் முனிவரை மீண்டும் வின விஞன்.

**வைதர்ப்பன்:-**

2. ஞானம் தினந்தோறும் சிறுகச் சிறுகப் படிப் படியாய் வருவதா? அல்லது சூரியன்போல் ஒரே காலத் தில் எங்கும் பூரணமா யிலகுமா?

பகவான் :—

3. ஞானம் தினந்தோறும் சிறுகச் சிறுகப் படிப் படியாய் வருவதில்லை; சாதனை முதிர்ச்சியாற் கணத்திற் பூரணமா யிலகும்.

வைதர்ப்பன் :—

4. பகவன்! சாதனை புரியுங்கால் உள்ளும் வெளியும் போக்கும் வரவுமா யிருக்கும் மனோவிருத்தியை ஞான மெனலாமா ?

பகவான் :—

5. அறிஞ! உள்ளே சென்ற மதி மீண்டும் வெளியுறின், அது அப்யாஸமே யாகும். நழுவா அனுபவமே ஞானம்.

வைதர்ப்பன் :—

6. முனிவரேறே! அறிவுமிக்கோரால் சில நூல்களில் ஞானத்தின் படி(பூமி)கள் கூறப்பட்டுளவே— அவற்றின் பொருத்த மெவ்வாறு ?

பகவான் :—

7. நூலிற் கூறியுள்ள ஞானப்படிகளெல்லாம் முக்தி பேதங்களைப் போலவே பிறர்மதிபற்றியவாம். மதிமிக்கோய்! அறிந்தோர்க்கு ஞானம் ஒன்றே.

8. வினைபற்றி வரும் உடல் பொறி முதலியவற்றின் செயல் நோக்கிப் படிகளைப் பிறர் கற்பனை செய்கின்றனரே யன்றி உண்மையில் ஏற்றத் தாழ்வில்லை.

வைதர்ப்பன் :—

9. அஞ்ஞான மனைத்தையும் அகற்றும் அனுபவ ஞானம் ஓர்காற் கைகூடியும், மீண்டும் பற்றுதலான் முளைக்கும் அஞ்ஞானத்தால் அது மறைவுறுமா ?

பகவான்:—

10. பரத்வாஜ குலவிளக்கே! அஞ்ஞானத்திற் கெதிராம் அனுபவஞானம் ஓர்கா லுறின் மீண்டுமது சிதைவுருது.



## பதினெட்டாம் அத்யாயம்

### ஸித்த மஹிமானுகீர்த்தனம்

1. உயர் பராசர கோத்திர முற்றவனும், பூசுர குல கீர்த்திகரனும், மாசகல் சுந்தரார்யனது அருஞ் செல்வனும், விரிதாமரையிதழ்க் கண்ணனும்,

2. அருணாசலத்தி லிலகும் ஆச்ரம வாசியும், மறுவிலா நிலை பிறழாப் பரமஹம்ஸனும், தயையால் விவகார தசை யுற்றவனும், அழிவறு மான்மாவில் என்று முறைபவனும்,

3. ஐயம் யாவுங் களையும் வாக்கினனும், மலைப் பெனும் மதயானைக் கங்குச நோக்கினனும், பிறர் நலவூக்க மிடையரு துற்றோனும், தனதுடல் விஷயத்திற் சோம்பல் மிக்கவனும்,

4. கனிந்த மாங்கனி யொளியுறு மேனியனும், அலையும் பொறிகளை யடக்கு மாற்றலானும், குலைவிலா ஞான நிறைவெனுங் கொடியை மணந்தோனும், ஆகம சாரத்தைச் சின்மொழியிற் சுருக்கி யருள்வோனும்,

5. தாமரைநேயனெனத் தனது தூயவொளிமிகு கதிர்களால் அடி சார்ந்தா ரஞ்ஞானத்தைக் காலத்தால் அகல்விப்பானும், அனந்த கல்யாணகுணசீலனும்,

6. வாக்கில் மென்மைமிக்கானும், நோக்கிற் குளிர்ந்தானும், கமலமுகத்தலர்ந்தானும், பகல்மதி நிகர் மனத்தொன்றுமிலனும், விண்ணிற் பரிதிபோல் இதயத்தொளிர்பவனும்,

7. உடலைப் பேணுங் கருத்திலனும், விரதங்காக்கும் வன்மையனும், புலனின்புன்ன நெஞ்சினனும், ஆசை சினமறு மஹர்ஷியும், நிறைஞான லஹரியால் மத முற்றேனும்,

8. மயலும் லோபமும் மதமும் மாற்சரியமுமிலா நித்ய மங்கள வடிவினனும், கைம்மாறின்றிப் பிறவிப் பெருங்கடல் தாண்டுவிப்பதில் என்றும் முனைந்தவனும்,

9 "தாய் என்னவள்" என்று மலைமகள் மடியிற் கரிமுகன் அமருங்கால், "சரி! போ, தந்தை என்னவன்" என்று ஹரன்மடியமர்ந்து, அன்னேனல் உச்சி முகரப் பெற்ற வெற்புடைத்தோனது அவதாரமானவனும்,

10. "ஓம் வசத்புவே நம:" என்னும் மந்த்ரத்தின்* மறைபொருளாயினனும்,

11. தண்டமிலாத் துறவியாயினுந் தண்டபாணியும், துயர்க்கடலுக்கோர் தாரகனெனினுந் தாரகாரியும், பவத்தைவிட்டு, அச்சோ! பவ (சிவ) வழிபாடொழியாதவனும், மானதச் சேர்க்கை யவாவிலாப் பரமஹம்ஸனும்.

12. தைரிய சம்பத்திற் பொன்மலை போன்றவனும், கடலினும் ஆழ்நிலையனும், அசையாதனைத்துந் தாங்குந் தரணியிற் பொறைமிக்குடையானும், அடக்கத்திற்கோர் சான்றும், குழப்பத்திற்குத் தொலையானவனும்,

13. தெளிவில் நீலோற்பல நேயனை நிகர்த்தவனும், ஒளியிற்றுமரை நாயகனும், பிரஹ்ம நிஷ்டையில் ஆலின்

---

*இதன் விளக்கத்தை நூன்முடிவிற் காண்க.

கீழமர்ந்த அப்பனை நினைவுறுத்துவானும், அலேவிலனும் என தனுஜனும்,

14. மாதுர்யமய மங்கள விருத்திவடிவாந் தேவ ஸேனையெனும் அணங்கு இன்றுஞ் சிரத்தொளிர்ந்துங் காதல் வாடையிலாதவனும், ஆதலின், இல்லோனுயினு மெதிகட்கதிபதியும்,

15. வணங்குவார்க்கு வரமருள்வோனும், மந்த்ர நாயகரிலுயர் மனிதயானைக்குங் குருவா யிலகுவானும், திருவடி நீழலுற்றவரின் தாபமகற்றும் மந்தார தருவும்,

16. வேதத்திற் குயிரளித்துப் பற்பல வற்புத யுக்தி களால் அழகுறும் "தந்த்ர வார்த்திக" த்தை யியற்றிக் கற்றோர்குழுவின் புகழுற்ற குமரிலபட்டனே வேதாந்த வாக்கிய விசாரத்திற்காக வேறு வேஷமாய் வந்தவனும்,

17. 'குறுகத்தறித்த' அருமறையும், மாண்பொருள் செறி யுபநிடதப் பனுவற்சுவைத் திரட்டுமாஞ் சிறப்புறும் * அருணுசல பஞ்சரத்னத்தை யருளிய குருவரனும்,

18. கீர்வாணப் பயிற்சியுங் காவிய வாசனையும் அற் பமு மிலனுயினும், நூலியற்றுங்கால் உயர்கருத்திசையும் ஒளிவாக்கினனும்,

19. உலகன்னையின் முலேபருகி நடமிடு நாவினுல் நம் பன் புகழிசைத்த கவியரசும், அந்தணத் தமிழ்க் குழவியு மாம் சம்பந்தனது மறுபிறவியும், வரையறு மதியினனும்,

20. நிலவுலகிற் பரநிஷ்டை நிலேயுணர்த்தியுக்திவாத விருளை யொழித்தற் குதித்தவனும், குருகுமலே குடைந் தோனது மூன்ருமவதாரமும்,

---

* இது இந்நூன் முடிவில் உளது.

21. அகஸ்தியர் முதலாம் முனிவர் போற்றுந் தமிழ் மொழியிற் புகழ்மிகு கவியும், நலிவிலாப் பரஞ்ஜோதியைக் குருவிலா தருளினுற் கண்டவனும்,

22. பாலன், மூடன், இடையன், குரங்கு, நாய், தீயோன், அறிஞன், அடிசார்ந்தவன் முதலாம் யாவரிடத்தும் எதனிடத்தும் பக்ஷபாதமறு சம நோக்கினனும்,

23. ஆற்றல் மிகுந்தும் அமைதி சமைந்தோனும், பக்தனுயினும் பேதமற்ருேனும், ஆசை துறந்து நல்லருள் பூண்டவனும், வானவனுயினும் வணக்கமுற்ருேனும்,

24. "எந்தைபாற் செல்கிறேன். எனைத் தேடற்க" வென்று எழுதிவைத்து வீடுவிட்டு வெளிப்போந்து அருணசலனடி சார்ந்தவனுமாய்,

25. இங்ஙனங் குணத்திரளால் அழகுபெறும் ஸ்ரீ ரமண பகவானை அமிருதநாத யதிசிரேஷ்டன் ஸித்தர்களின் எல்லையிலா மஹிமையைப்பற்றி வணக்கத்துடன் வினவினன்.

26. "ஸித்தர் பெருமை சிந்தைக்கரிதாம். சிவனுக்கிணையவர் சிவரூபர். வரங்க ளருளுந் திறத்தினர்." என்று அசலத்துறை பகவான் அவனுக்கருளினர்.

**பதினெட்டாம் அத்யாயம் முற்றிற்று.**

---

## ஸ்ரீரமணகீதை முற்றிற்று.



# அநுபந்தம்

---

I

## மந்த்ரோத்தாரம்

वेदादिपाकदमनोत्तरकच्छपेशै
र्युक्तै र्धराधरसुषुप्त्यमरेश्वरैश्च ।
सूक्ष्मामृतायुगमृतेन सह प्रणत्या
सम्पन्नशब्दपटलस्य रहस्यमर्थम् ॥

(अ. १८, श्लो. १०.)

**வேதாதிபாகதமனோத்தர கச்சபேசைர்**
**யுக்தைர் தராதர ஸுஷுப்த்யமரேச்வரைச்ச ।**
**ஸூக்ஷ்மாம்ருதாயு கம்ருதேந ஸஹப்ரணத்யா**
**ஸம்பந்ந சப்தபடலஸ்ய ரஹஸ்யமர்த்தம் ॥**

(அத்-18, சுலோகம்-10)

வேதாதி என்பது பிரணவம். பாகதமனோத்தரம் என்பது இந்த்ர பீஜமாம் லகாரத்திற்கு அடுத்த வகாரம். கச்சபேசன் என்பது கூர்மேசன் என்னும் பெயரிய ருத்ரனது பீஜமாம் சகாரம். அவைகளுடன், அதாவது, 'ஓம் வச' என்னும் இவ்வக்ஷரங்களுடன், தராதரம் என்பது பர்வத பீஜமாகிய தகாரம். ஸுஷுப்தி என்பது நித்ரையென்னும் பெயரிய சக்தியின் பீஜமாம் பகாரம். அமரேச்வரன் என்பது அமரேச்வரனென்னும் பெயருடைய ருத்ரனது பீஜமாம் உகாரம். இவை சேர்ந்த 'த்பு' என்

னும் இவ்வக்ஷரத்தோடு என்றவாறு. சூக்ஷ்மாம்ருதா என்பது சூக்ஷ்மாம்ருதா வென்னும் பெயரிய சக்தியின் பீஜமாம் ஏகாரம். அதனுடன் கூடிய அம்ருதம்-ஜலபீஜம் (வ)-அதாவது 'வே' என்னும் அக்ஷரத்துடன். ப்ரணதி யுடன், 'நம:' என்னும் பதத்துடனுஞ்சேர்த்துக் கூட்டிக் கிடைக்கும் சொற்றொகுதியாம் "ஓம் வசத்புவே நம:" என்னும் மந்த்ரத்தின்-அறிஞர்களாலேயே உணர்தற்கிய லும்-ரஹஸ்யப் பொருளாம் ரமணபகவானை அம்ருதநாத யதீந்த்ரன் கேட்டானென்று மேலே அன்வயம்.



# அனுபந்தம்

---

II

(அத்-18, சுலோகம் 17-ல் குறிப்பிடப்பெற்ற)

ஸ்ரீ

## அருணாசல பஞ்ச ரத்னம்

(மொழிபெயர்ப்பு)

1. அருணிறைவான அமுதக்கடலே! கனமாம் உலகை விழுங்கும் கிரணத்திரளோனே! அருணாசல பரமாத்மாவே! அகத்தாமரை நல்கலர அருணனுயொளிர்.

2. அருணாசலா! சித்திரமாம் இதுவெல்லாம் உன்னிடத்தே யுதித்து நிலவி யிலயமாம். இதயத்தே நீ தானாய் நானென நடமிடுவை. ஆதலின் (ஆன்றோர்) உன்பெயர் இதயமென்பர்.

3. அருணாசலா! அகத்தே புகுந்த தூய்மைமிகு மதியினால் நானென்பது எங்கிருந்துறுவதென நாடித் தன் சொரூபத்தை யுணர்பவன், கடலில் நதியென, உன்னிடமொடுங்குவான்.

4. வெளிவிஷயங்களை விட்டுப் பிராணனை யடக்கி மனத்தையுமடக்கி உள்ளே யுன்னைத் தியானிக்கும் யோகி உன்னிடம் ஒளியைக் காண்கிறான். அருணாசலா! ஈதுன் மகிமையாம்.

5. அருணசலா ! உன்னிடமொப்புவித்த மனத்தால் எப்பொழுது முன்னைக்கண்டு எல்லாவற்றையும் உன்வடிவாகவே ஏகாந்தபக்தியால் வழிபடுவோன் இன்பமயனும் உன்னில் மூழ்கி விளங்குவான்.

**தேவர்மொழியில் (ஸம்ஸ்க்ருதத்தில்) ஆர்யா கீதி விருத்தத்தில் பகவான் ஸ்ரீரமண மஹர்ஷிகள் அருளிய அருணசலதர்சனமாம் இப் பஞ்சகம் உபநிஷத் ரத்னமாம்.**



